உ

சிவமயம்.

# திருச்செந்தூர் கந்தர் அற்புதமாலை.

## இரண்டாம் பாகம்.

இப்பிரபந்தங்கள்

செல்வமருதூர், கிராமமுனிசீப்

மகா-௱-௱-ஸ்ரீ

திருப்பாற்கடல்நாத பிள்ளையவர்கள்

விருப்பத்தின்படி

பத்தை பண்டிதன்குறிச்சி,

குலசேகரநாதக் கவிராயரவர்கள்

குமாரர்

பன்னிருகைப்பெருமாள் கவிராயரவர்களால்.

இயற்றப்பட்டன.

தூத்துக்குடி, வேலாயுதம் பிரிண்டிங் பிரஸில்,

பதிப்பிக்கப்பட்டது.

1920.

உ

சிவமயம்.

# திருச்செந்தூர்

# கந்தர்

# அற்புதமாலை.

## இரண்டாம் பாகம்.

இப்பிரபந்தங்கள்

செல்வமருதூர், கிராமமுனிசிப்

மகா-ள-ள-ஸ்ரீ

திருப்பாற்கடல்நாத பிள்ளையவர்கள்

விருப்பத்தின்படி

பத்தை பண்டிதன்குறிச்சி,

குலசேகரநாதக் கவிராயரவர்கள்

குமாரர்

பன்னிருகைப்பெருமாள் கவிராயரவர்களால்,

இயற்றப்பட்டன.

தூத்துக்குடி, வேலாயுதம் பிரிண்டிங் பிரஸில்,

பதிப்பிக்கப்பட்டது.

1920.

உ

சிவமயம்.

1. கர்த்தர் ஒவ்வொரு மாதமும் செய்த அற்புதங்கள்.
2. ஸ்தலத்தின் மகிமை.
3. வாகனக் கவிதை.
4. சித்ரா நதி வைபவம்.
5. சந்தான விரதம்.

கணபதி துணை.

## வசனம்.

ஒவ்வொரு நாளும் இரவும்பகலும் நடந்த அற்புதங்களைக் கண்டு தெரிசித்தோம். விஸ்வரூப மகிமையையுங் கேட்டு ஆனந்தித்தோம். இனிமேல் ஒவ்வொருமாதமும் நடக்கிற அற்புதங்களைக்கண்டு தெரிசிப்போம்,

### பைங்குனி மாசம் களபச்சபலி-வேறு.

செயமிகும்பைங் குனிமா சத்தி னிதில்
தெய்வீக செந்தூரா லயத்தி லன்று
நயம்பெருக வேயிரண்டாம் பிரகா ரத்தில்
நாவலர்கள் புகழ்மேவ தங்க ரோத
வுயர்மயில்மேற் களபச்ச பலிதான் சுற்றி
உல்லாச மாகவருங் கால மெல்லாந்
தயவுடன்கந் தனிருந்த கோலங் கண்டு
தாரணியி லேசேவித் தருள்பெற் றோமே, (70)

### சித்திரை மாசம் சித்திரைவிசு-வேறு.

ஜெகமெலாம் விளங்குஞ் செந்திலம்பதியிற் சித்திரை விசுதனி லன்பற்
கபாரமோக்ஷம் அருள்செய்யக்கன்னி இருவரோடாறுமா முகனே
அகமகிழ்வோடு சகரூபமாகி அன்னபி சேகங்கொண் டிருந்தாய்
முகமலர்ந் தவரோ ருடன்தெரி சித்தேன் முன்னின்று வினைகயர்த்தானே

### சித்திராபரணி-வேறு.

சீர்மிகுஞ்சித் திரைமாசம் பரணி தன்னிற்
சிரால னைக்கறிவைத் தழுதோ டுன்னைப்
பேருபரும் வயிரவராய்த் திருச்செந் தூரிற்
பிரியமுடன் வந்துசிறுத் தொண்டர் தம்மைப்
பார்புகழுங் கயிலாசஞ் சேர்த்தே யாண்ட
பரனேயுன் றிருக்கோலங்கண்டா ரியாரும்.
பேரின்பம் பெற்றார்கள் நானுங் கண்டேன்
பிழைகள்பொ றுத் தடியேனை யாட்கொள் வாயே. (72)

### சித்திராபௌரணிமை.

புண்ணியகா லச்சித்ரா பௌரணமி யிநாள்
புகழ்செந்தூர்க் கந்தருக்குக் காணி வாரித்

நேசர்களெ லாந்துதிகள் சொல்லி மேலா
நெறியுடனே விண்ணோர்கள் விசாகந் தன்று
வாசமலர் தூவிதெரி சித்து நிற்க
வர்ணமயி லேறிநீ நின்ற கோல
மாசையுடன் கண்டுதெரி சித்தே னுமே
னவமான மிடிகோபந் தீர்த்தாள் வாமே. (77)

௸ ஆனி ௴ உத்திரம் அன்னாபிடேகம்.

சுந்தரரூ பத்துடனே திருச்செந் தூரிற்
றுலக்கியதோ ரானியுத் திரத்தி லன்றே
அந்தர்துந் துமிபலவாத் தியமு ழங்க
வகங்களிந்து முனிவர்குழாம் பலர்கொண் டாட
மந்திரங்க ளாலன்ன வபிடே கங்கள்
மறையோர்கள் செய்யமன மகிழ்ந்து நின்றாய்
எந்தன்னிரு கண்குளிரத் தெரிசித் தேனே
யீசனே நடராஜா எனையாள் வாமே. (78)

ஆடிப்பூரம்.

மகிமைதரு மாடிமா சம்பூ ரத்தில்
மகிழ்ந்துபார் வதித்தாய்நீ செந்தூர் மேவி
ஜெகத்துயிர்கள் தழைத்தோங்க விண்ணோர் போற்றச்
சிறப்புடனே முளைக்கொட்டித் திருநாள் தன்னில்
முகமலர்ந்து குளிர்ந்தருளுங் காட்சி தன்னை
மூடனு னடியேனுன் னன்ப ரோடும்
அகங்களிந்து கண்டுதெரி சித்துக் கொண்டேன்
அடிமைகொண்டு மிடியிடர்தீர்த் தெனையாள் வாமே. (79)

திருவாடிச்சோதி.

நலம்பெருகு மாடிமா சத்தி லென்றும்
ஞானமிகுந் திருவாடிச் சோதி யன்றே
உலகில்வெள் ளையானை யதை யனுப்பி
உத்தமர்சுந் தரர்சேரர் தமையாட் கொண்டாய்
நிலைபெறவே திருச்செந்தூர்க் கோயில் வந்து
நின்னடியார்க் கருள்புரிந்தா யுமையே பாகா

பலவடியா ருடன்கண்டு தெரிசித் தேனென்
பாவவினை களையெல்லாந் தீர்த்தாள் வாயே. (80)

ஆடியமாவாசி.

செல்வமிகு மாடியமா வாசி தன்னில்
சிறந்திருக்குஞ் செந்தூரிற் கந்தா நீதான்
வல்வினைதீர்த் தன்பர்களை யடிமை கொள்ள
வந்துநின்ற கோலத்தை யடியார் கண்டு
சொல்மாலை யாய்த்துதிசெய் தடி பணிந்து
சுகம்பெற்ற ரடியேனுன செய்கை கண்டு
பலிதமாய்க் கவிசெய்து துயர மெல்லாம்
படித்தேனென் வறுமையிடர் தீர்த்தாள் வாயே. (81)

ஆவணியவிட்டம்.

வையகத்திற் பூரணையா வணிய விட்டம்
வருங்காலிற் றிசுதந் தரர்க ளான
துய்யமறை யோரெவரு மொன்று சேர்ந்து
சுகமாய்ச்செந் தூற்கோயிற் புகுந்து கந்தன்
மெய்படியைப் பணிந்தோம மிக வளர்த்து
வேதவிதிப் படிபூணூல் தரித்து மார்பில்
அய்யனிலை பூசிசந் தனம்பூ வாங்கி
அருள்பெறுவா ரவர்மகிமை அதிக மம்மா. (82)

திருநாள் நடத்தக் காப்புக்கட்டுகிறது.

ஆவணிமா தவிழவு நடத்தப் பூரட்
டாதியிலே கந்தரும்பட் டருந்த மக்கு
ராகவலர்போந் துமஅல்நர் தேவ ரோடு
நன்றாகுபே ரன்பட்ட ணம்போ யங்கு
மேவியபொற் கைமண்ணை யெடுத்தே யிந்த
மேதினியிற் செந்திவிரு யகர்முன் வந்து
ஆவலுடன் முளைத்தெளித்துக் கையிற் காப்பு
அரன்மகிழக் கட்டி மகிழ் மூழ்கி னுரே (83)

ஆவணி மீ அசுபதிநட்க்ஷத்திரத்தில் கொடியேற்றம்
அமரபக்ஷம் தெக்ஷணுயனம் சிரியதிருநாள்.

ஆனந்தக் கடலாட்டுங் கந்த னுக்கே
ஆவணிமா சஞ்செந்தூ ராலயத்தில்

ஞானமுள்ள பெரியோர்கள் திரண்டு நின்று
நலம்பெருங் கொடியேற்றி யலங்காரித்து
வானுலகோர் கண்டுமலர் மழைபோற் றூற்ற
மகிழ்ந்துதெரி சனஞ்செய்து களிபெற் றார்கள்
நானுமிரு கண்குளிரத் தெரிசித் தாய்ந்தேன்
நம்பினேன் கவலைவிட்டேன் நயம்பெற் றேனே. (84)

ஆவணித்திருநாள்.

அலைமருவுஞ் சந்தவரைச் செந்தூர்க் கோயில்
ஆவணியில் திருவிழாத் தினங்கள் தோறும்
பலவிதமாய் ஒவ்வொருநற் கோலங் கொண்டு
பவனிவந்தாய் வீதியெல்லா மடியார் நின்று
நலம்பெற்றார் கந்தாவுன் றனைச்சேவித்து
நாயேனுந் தெரிசித்தே யகங்குளிர்ந்தேன்
புலையனுக்குங் கடையேன்புன் மனைதக் கொன்று
புத்திதந்தென் கவலையைத்தீர்த் தாட்கொள் வாயே. (85)

கலசமாட்டு.

ஆவணிமா சங்கொடியை யேத்தி யன்பர்
அன்றுமுதற் பத்துநாட் திருவிழாவும்
நாவலர்கள் புகழஅலங் காரஞ் செய்து
நடத்தியபின் பத்தாநாள் பகத்தி லேதான்
தேவர்புகழ் செந்தூரிற் கொடியி றக்கித்
தெளிவாய்வி சாகத்திற் கலச மாட்டும்
ஆவலுடன் செய்கருளைப் பெற்றார் கந்தன்
அடிபணிந்து சுகம்பெற்றோ மருள்பெற் றோமே. (86)

பிள்ளையார் சதுர்த்தி.

பரவையுரு முலகினிற்செந் தூரி னலை
பலன்றருமா வணிமாசஞ் சதுர்த்தி யிற்பன்
னிருகைவடி வேலனுக்கு முன்பு தோன்றி
இடர்களைத்தீர்த் தடியாரை ரெக்ஷித் தாளும்
ஒருகைமுக னெனிருந்து கரனை நாதர்
உண்மையுட னிருந்த திருக்கோலத்தை
யுரிமையாய்ச் சிறியேனுந் தெரிசித் தேனென்
னூழ்வினைசெய் வறுமையெல்லாந் தீர்த்தாள் வாயே, (87)

புரட்டாசிமீ நவராத்திரிக்கோலு அலைவாயுகந்த பெருமானுக்கு.

புரட்டாசி நவராத்ரை கொலுவிற் செந்தூர்
புகழ்பெருஞ்சுப் பிரமணிய ராலயத்தில்
அருளலைவா யுகந்தபெரு மானே நீசக
லவதாரஞ் செய் திருந்த கோல மெல்லாம்
பிரியமாய்க் கண்டுதெரி சித்தா ரன்பர்
பேரின்ப வீடுபெற்று மடியே னுறும்
கருதியுனைக் கண்டுதெரி சித்தே னென்றன்
கவலைகள்தீர்த் தாட்கொண்டிட என்னையாள் வாயே. (88)

வசனம்.

அலைவாயுகந்தபெருமான் எடுத்த திருக்கோலங்கள் புரட்டாசிமாசம் பிரதமையன்று கேதாரநோன்பு என்ற மாநோன்பு ஆயுதபூசை முதற்றிருநாள் பத்தாந்திருநாளில் அன்றைக்குக் கந்தன் ஆயுதபூசை முடித்து ஆயுதங்களை எடுத்துக் கொண்டு வேட்டைக்குப் போகிறார்.

நொண்டிச்சிந்து.

திருவளர் புரட்டாசி பிரதமை
செயந்தரும் கேதார நோன்பதனிற்
வருந்திரு நாளொன் றிற் செந்தூரில்
வாழ்கந்தன் பக்தர்கள் மனக்கனிய
தனக்குள்ள சயரூப மெடுத்துத்
தாணியி லேயருள் கொடுத்திருந் தான். (89) 1
சிவனைக்குருவன் பார்க்கெல்லாக் கந்தன்
சீவியுடன் றிருநாள் ரெண்டில்
மனக்கவலை தீர்த்து ரக்ஷிக்கும்
மகாராஜனுக்கோல மெடுத்திருந் தான். (90) 2
திருமாலுமாய்க் கந்தன் மூன்றும்
திருநாளிலாதி சேடன் மேலே
பிரியாதவன்பர் கள் போற்ற
பிரியத்துடன்சய னித்திருந்தான். (91) 3
பார்க்குந் தவமுனிவர் காணப்
பன்னிருகையன்னி நாரா யிலை

ஷேடி.

பத்தநாளக் கோயிலைக் கொண்ட கந்தன்
பாதிற்செந் தூரிலைப் பசிய ஆவில
சித்தமகிழ் வைய்முகமே யாறாய் நின்றன
சேர்ந்தடியா ரன்னமிடட் டேகஞ் செய்தார்
சத்தரிசி முனிவர்தா னிபோர்கொண் டாடத்
தாயவள்ளி தெய்வானை மேமேல யனபு..
வைத்தவனைக் கண்டுதெரி சித்துக் கொண்டேன்
மனக்கவலை யற்றுமகிழ் மூற்றேனே. (104)

ஐப்பசி மாசம் தீபாவளி.

பாரிலைப் பசிதீபா வளியி லீசன்
படாசுரசா குரனை யே கொன்ற நாளில
பேர்பொருந்தப் பண்டிகைகொண் டாடி யோத
போனத் தத்தைக்கொண் டுலகோ ரியாரும்
தாரணியுங் கடப்பமலர்க் குமரா செந்தூர்ச்
சண்முகனை வந்திருச்சந் நிதிமுன் னின்று
சீர்பெறவே தெரிசித்தா ருடனுன் கண்டு
தெரிசித்தே னென்கவலை தீர்த்தான் வாமே. (105)

கந்தசஷ்டி.

கார்பொழியு மைப்பசிமா சத்தில் வந்த
கந்தசஷ்டி யில்தேவர்க் கிடுகள் செய்த
சூரனைச்சங் கரித்தயா பயில்மே லேறிச்
சுகமான வாறுமுகத் துடனே யென்றும்
பாரிலுயர் செந்திநகர்க் கோயில் வந்து
பழமையா குடினே யிருந்த கோலந்
தாரணியோ ருடனின்று தெரிசித் தேனுன்
சண்முகனை வினைகளைத்தீர்த் தெனையாள் வாமே. (106)

வேறு-சூரசங்காரனுக்கு திருக்கலியாணம்.

தொண்டர்கள் போற்றுஞ் செந்தூர்ச்
சுப்பிர மணியா ரீதான
அண்டரு மகிழுந் தெய்வ
யானையை மணம்பு ரியில

அய்யனே நின்னடியைப் பணிந்து கண்டேன்
ஆதார மில்லையெனக் கருள்செய் வாயே. (118)

சுந்தரமூர்த்தி நாயனாரிடத்தில் வழிப்பறி.

அப்பொன்வகை சேரன்தந் தானத னக்கே
அருளியதைக் கொண்டுவரும் வழியிற் பூதம்
எம்பிரா னேவலினால் கள்ளராகி
இடையிற்போய்ப் பறிசெய்து போனதற்பின்
நம்பன்மேல் மனதுருகிப் பதிகம் பாடி
நற்பொருளைப் பெற்றுயர்ந்த பிபல்லைச் செந்தூர்
உம்பர்கள்போற் றுங்கந்த னாலயத்தில்
உண்மையுடன் கண்டுதெரி சித்துய்ந் தோமே. (119)

தை மாசம் இரண்டாந்தேதியில் பாரிவேட்டை.

இடர்கெரு கலியிருபான் டாண்டு தோறும்
இடையில்வருந் தைமாசந் தேதி ரண்டிற்
கடல்சூழ்ந்த வுலகிற்செந் தூரி லென்றுங்
கருணைபொழி சந்தவரைக் குகையில் மேவும்
படைசூழ்ந்த சூரனைச்சங் காரஞ் செய்த
பன்னிருகை வேல்முருக னாலயத்தில்
நடந்துவரு மற்புதத்தி னிதன்பின் னென்று
நலம்பெருக மனமகிழ்ந்து நல்கு வேனே. (120)

பாரிவேட்டை.

எத்திசையோர் போற்றுஞ்செந் தூரினிற்பன்
னிருகைவடி வேலனைத் யிரண்டாந் தேதி
பக்தர்கள்சூழ் முக்குதிரை வாகனத்திற்
பார்வேட்டை யாடிவந்த கோல
முக்திபெறு வீதியெலாம் படியார் கண்டு
முன்சென்று அடிபணிந்து சுகம்பெற் றுங்கள்
சத்திவடி வேலாவுன் னருளைக் கண்டு
சரணமடைந் தேனென்னை யாட்கொள் வாயே. (121)

தைப்பூசம்.

பாண்டியன்றன் மகள்குதிரை முகத்தை மாற்றும்
பாவத்தைத் தீர்க்குமந்த நாட்பத்தில்

கைதொழுதா ரனைத்தக் கண்ணீர் விட்டார்
கண்டடியேன் தரிசித்தேன் களித்தேற் றேனே. (136)

வேறு மாதாந்தம் சுக்கிரவாரத் தோறும்.

செந்தூர்சுக் கிரவார மாதாந் தந்தொறு
தெய்வகுஞ் சரிவள்ளி யிருவ ரோடும்
அந்தமர்கோன் சிவசுப்ர மணியன் றானும்
ஆனந்தத் துடனீல மயின்மே லேறி
வந்திருடி முனிவர்குழாஞ் சூழ்ந்து போற்ற
வையகத்தோர் புகழ்வாத் தியமு முழங்க
சுந்தரமாய்ச் சந்தவரைக் கோபுரத்த
சுற்றிவந்தார் தெரிசித்தோரு சகம்பெற் றோமே. (137)

மாசப்பிறப்பு தோறும்

வருஷமா சப்பிறப்பு தோறுஞ் சந்த
வரைக்கோபு ரமட்பிரகா ரத்தை நீதான்
திருக்கோலத் துடன்மயில்மே லேறி வள்ளி
தெய்வகுஞ் சரியுடனே சுற்றி வந்தாய்
கருணைபுரி செயந்திநா யகனே உன்னைக்
கண்டன்ப ரோடடியே னுஞ்சே வித்தேன்
தெரிந்துதெரி யாமற்செய் பிழைக ளெல்லாந்
திருக்கண்பார்த் தகற்றியெனை யாளு வாயே. (138)

கிரகணம்.

சீர்பொருந்தும் வையகத்திற் செந்தூர் வந்து
சிவனடியா ரெல்லாங்கி ரகணகா லந்தன்னில்
நீர்பொருந்துங் கந்தபுட் கரணி தன்னில்
நெறியுடனற் கடற்றீர்த்த மாடி யுன்முன்
நேர்பொருந்த நின்றுனன் முகனை யென்று
நிதமறவா நெறியடைந்தார் செய்கை கண்டு
பேர்பொருந்து முருகாவுன் முன்னுன் வந்தேன்
பிறவிநோய் தீர்த்தருள்செய் தெனையாள் வாயே. (139)

வசனமிருக்குமவர்கள்.

அன்பர்குறிப் பிட்டநா [illegible] சந்நிதியில்
தாரம்பல பொற்பணிக ளணிந்த யன்னம்

இன்பமுட னைவேத்யம் பலவுஞ் செய்தே
இதமாய்த்தூ பதீபஞ் செய்வித் தார்கள்
முன்புநின்று பக்தரெல்லாந் தெரிசித் தார்கள்
மூடனடி யேனுமங்கன் படிய ளித்தேன்
என்பிழைபொ லாமன்னித் தென்னையாள்க் கொள்வாய்
இறைவனே குமரகுரு பரசெல் வேலனே. (140)

காவடி.

அன்பர்சிலர் தனித்தனியு மொன்று சேர்ந்து
மாறுமுகா கந்தாவுன் றனக்கு வேண்டும்
இன்பமிகும் பாலபன்னீர் முதலாயுள்ள
எந்தவகைக் காவடியு மெடுத்தே யாடி
யன்புகழைப் பாடிதிருச் செந்தூர் வந்தே
யுண்மையுடன் செலுத்தியருள் பெற்றார் நாயேன்
என்புகசிந் துருகியுன்மே லன்பு வையா
தேழையே னென்னைக்கடைக் கண்பார்த் தாள்வாயே. (141)

அக்கினிக் காவடி.

ஆயிரத்தோ டெண்பத்தி யெட்டா மாண்டு
ஆனபுரட் டாசியெட்டாந் தேதி யன்று
ஞாயமுறப் போலொருவர் தேக மெல்லாந்
தாங்குமெழுக் கிச்செந் தூரில் நல்ல
நேயமுடன் சண்முகவி லாச முன்பு
நெருப்புவளர்த் ததின்மேற்கா வடியெடுத்து
ஞாயமா யாடியருள் பெற்றார் கண்டு
ஞாலத்தோ ரெல்லாரு மயம்பெற் றாரே. (142)

அமாவாசை தோறும்.

அவனிதனிற் றிருச்செந்தூ ராலை யத்தி
லமாவாசை தோறும்பிர காரந் தன்னை
தவமுனிவர் சித்தர்முத லானோர் காண
தயவுடனீ சுற்றிவந்த கோலங் கண்டு
சிவபாலா குமாரனென் றன்ப ரெல்லாந்
தெரிசித்துச் சுகம்பெற்றா ரடியேன் கண்டேன்

கவலைமிடி யிடர்நீங்கி எனையாட் கொள்வாய்
கந்தனென பன்னிருகை வேற்செவ் வேளே. (143)

### கார்த்திகை தோறும்.

கார்த்திகைநக்ஷத்திரத்தோ டந்திசெந் தூரிற்
கந்தரவன் றிருக்கோலக் காக்ஷி நன்றாய்
பார்த்தானந் தங்கொண்டு பக்த ரெல்லாம்
பணிந்துதோத் திரஞ்செய்து சுகம்பெற் றார்கள்
கீர்த்தனைக ளோடுகவி மாலை பாடி
கேட்டபடியே யுங்கண்டு தெரிசித் தின்றேன
சேர்த்துன்னடி நிழலிலே கலந்தன் போடு
திருக்கண்பார்த் தென்னையுநீ யாளு வாயே. (144)

### நிலையங்கி.

ஆண்டில்வருஞ் சுக்கிரவா ரமா தரத்து
மன்றிபிர தோடங்கார்த் திகைவி சாகம்
நீண்டமூக்ய விசேடநாட் களிற்பொன் னூற்செய்
நிலையங்கி யுடன்றிருவா பரணஞ் சாத்தி
வேண்டியதன் பலர்மாலை பணிந்து பன்னீர்
விரும்பியடி யார்களிக்குத் தெரிசித் தார்கள்
ஆண்டசிவ குருநாத னழகைக் கண்டே
யாசையுடன் றெரிசித்தே னருள்பெற் றேனே. (145)

### அடியார்களிடங் கந்தனுடைய திருவாபரணங்களைக் காண்பிக்கிறது.

உனதுதிரு வாபரணம் பார்க்க வென்றே
உத்திரியா கண்டர்கள்நல் லடியா ரெல்லாம்
மனமகிழ்ந்து செந்தூரில் வந்து நின்றார்
மறையோர்கள் கருகூல வறை திறந்து
இனஇனமாய் நிலையங்கி முதலா யுள்ள
எவ்வகையா பரணமெலாங் காட்டி னார்கள்
தனிவேறு மவர்களுடன் கண்டேன் கந்தா
சந்தசலம்விட் டேனருட்கண் பார்த்தாள் வாயே (146)

### கந்தனுக்கு அடியார்கள் ஆபரண மணிகிறது.

கந்தன்சண் முகனைக்கெல்லாங் கண்டோர்
களிக்கதின்மேல் வரைந்திருக்கும் பேழைப் பார்த்து

இந்தவித நகைகளிதாம் விநோத மாக
எவர்கள்பார்த் தாலுமா னந்தம் பொங்கச்
சொந்தமாய்ச் செய்தநிற்றன் பேரைச் சாற்றி
சுகரூப னுக்களித்த சேவிப் போமென்
றந்தரங்கத் தினில்நினைத்த படியே சேவித்
தருள்பெற்று மனத்தம்பே றடையவென் றுரைத்தே. (147)

வேறு-திருச்செந்தூர் ஸ்தலத்தின் மகிமை

உலகர்புகழ் கந்தன்செந் தூர்த்தலத்தி
னள்ளகொண்ட மணிசேத் திருச்சுனை மாதி
நலம்பெறவே குருசெல்ல அங்கனுள்ள
நற்றவத்தோர் கேட்டன்ன இன்ன காலம்
விலகாமல் நடக்கிறதென் றகக்கண் கொண்டு
விழித்துப்பார்த் தபொருத்தை உச்சரித்து
பலவகைதோத் திரஞ்சொல்லித் தனித்தி ருந்து
பக்திசெய்வா ரென்னணிறத்தோர் பகரொண் ணாதே. (148)

செடி

பாண்டியன்செந் தூர்க்கடலின் கரையி னல்ல
படிகட்டி நினைந்தவாங் குகையி டத்தில்
வேண்டினதின் படியலகள் திறக்கு மூடும்
வெளியாக்கும் பழயபடி மூடி வைக்கும்
ஆண்டில்வரு மார்கழிமா தத்தில் மட்டும்
அன்றிபதி னொருமாத மெல்லாம் யார்க்குங்
காண்டலரி தாருமப்பனே செயலை யார்தான்
கண்டறிந்து சொல்லவல்லோர் கல்வி யோரே. (149)

வேறு.

திருக்கோயிற் கோபுரமுன் கொடிமாமுன் கடலெதிரே திருச்செந் தூரும்
பரித்தேரு மந்தணரு மணிவீதி வீடுகளும் படைத்த தென்றுந்
தருக்களுட னேதெப்பக் குளமழகு மண்டபமும் தாலுகாவும்
பெருக்குஞ்சிவ ஞானிகளு நிறைந்திருக்குந் தலமகிமை பெரியதாமே. (150)

வேறு.

அறுமுகன் நலத்தைப்போலே அருள்புரி தலங்க ளுண்டோ
மறைபேபலார் துதிக்க நிற்கும் வருபவர் பவத்தை நீக்கும்

கன்னியர்கள் தம்முளத்தித் சவையி லாடுங்
கடலலைவா யுகந்தடிபரு மாலைச் சீர்கொள்
நன்னகர்செந் தூர்க்குமர விடங்க னாமா
நடனஞ்செய் தெடுத்திரா திருநா ளொட்டில்
அன்னகரில் லோடுகையில் வேட்டை யாடு
மலத்கோலங் கண்டுகனிந் தருள்பெற் றோமே. 22

9-ம் திருநாள் காலை

சுவாமிக்குத் தண்டிகை.

இணைகாக்கும் வள்ளிதெய் வானை காந்தன்
சிறப்பாய்முன் பின்றுறவர் பரந்த நின்று
மனமகிழ்ந்து சமக்கத்தண் டிகைமே லேறி
மறைபுகழ்செந் தூரின்கண் வீதியெல்லாம்
கனஞ்சேரு மொன்பதாந் திருநாட் காலைக்
ககனத்தோர் மலர்மாரி பெய்ய முன்செய்
வினைகள்தீர்த் தருள்கொடுக்க வந்தான் றங்கள்
மேதினியிற் றெரிசித்தோம் வினைவிண் டோமே. 23

9-ம் திருநாள் இரவு.

சுவாமிக்கு கயிலாசபருபதம் அம்மனுக்கு கமலவாகனம்.

தென்றுதமிழ் பெருகுதிருச் செந்தூர்க் கந்தன்
சிறந்தகயி லாசபரு வதத்தின் மேலும்
வள்ளிதெய் வானையுறற் கமல மேலும்
மகிழ்ந்தசைந்த ரிஷிமுனிவர் சூழ்ந்து போற்ற
மென்னா இருநாளொன்ப திரவிற் சுத்தி
வீதிதொறு பவனிவரக் கண்ணுருஞ் சுற்றுங்
கள்ளமில்லா வடியர்குழா மொட்டுஞ் சேதுவி
கண்டுதெரி சித்தேனற் கதிபெற் றேனே. 24

10-ம் திருநாள் காலை

சுவாமிக்கும் அம்மனுக்கும் ரதம்.

செங்கமலப் பொகுட்டுறையு மாதிகப் போதுந்
திருநடனம் புரியுஞ்செந் தூரில் வாழும்
பொங்கரவ மணிந்தசிவ சுதன்கந் தப்பன்
ஆவலினே லாமகிழக் கருணை கொண்டு

மங்கலவாத் தியங்கீத முழங்கத் தேரில்
மாதிருவ ருடன்றிருநாள் பத்தின் காலை
எங்கள்கலி தீர்த்தற்கு வீதிவந்தான்
எல்லாருஞ் சேவையைச்செய் திடர்தீர்ந் தோமே. 25

10-ம் திருநாள் இரவு

சத்தாபரணம் சுவாமிக்கும் அம்மனுக்கும் தந்தப்பல்லாக்கு
வேறு.

திருவோங்கும் வளங்கள்மிகுஞ் செந்தூரிற் றிருநாள்பத்திரவிற் கந்தன்
மருவளரு மலர்க்குழலார் வள்ளிதெய்வ யானையுடன் மகிழ்ந்தன்போடு
திருவீதி யிற்பவனி சிவிகையின்மே லேறிவந்தான் சிறப்ப தாக
வருமுயர்சத் தாபரணக் காக்ஷிகண்டோ ரெல்லாரு மகிழ்ந்துய்ந் தோமே.

11-ம் திருநாள் இரவு

சுவாமிக்கும் பல்லாக்கு அம்மனுக்கும் பல்லாக்கு வேறு.

பத்தாநாட் டிருவிழா முடிந்த பின்பு
பதினொன்றி னிராவள்ளி யானை யோடு
சித்தன்மகன் கந்தன்மகிழ் கொண்டு செந்தூர்த்
தெருவழியாய் தண்டிகையின் மீதில் வந்து
பத்தியுடை யோர்கண்டு பணிந்து போற்ற
பலமலரா லலங்கரித்த தெப்ப மீதில்
சத்திவே லுடனேறி சுத்தி வந்தான்
தயவுடனே யருள்புரிந்தான் றரிசித் தோமே. 27

12-ம் திருநாள் இரவு

சுவாமிக்கும் அம்மனுக்கும் சப்பரம் ரண்டு.

மருமலர்சோ லைகள்சூழுந் திருச்செந்தூரில்
வாழ்கந்த சுவாமிபன்னி ரெண்டி ராவில்
கருணையுடன் வள்ளிதெய் வானை யோடு
கனிந்துபூஞ் சப்பரமேற் சிறப்பாய்க் கொண்டு
திருநடன சங்கீத தாள மோங்க
சித்தர்மா தவர்முனிவர் சூழ்ந்து போற்ற
திருவீதி பவனிவந்தான் யாங்க ளெல்லாம்
தெரிசித்தோ மருள்பெற்றோஞ் செயம்பெற் றோமே. 28

வாகனக்கவிதை முற்றிற்று.

சிவசண்முக நாதன் துணை.

---

உ

சிவமயம்.

## சித்துபுரம் வைபவம் உரைத்த அத்தியாயம்.

---

கொடியபா தகனொருவன் மிலேச்சன் செந்தூர்க்
கோயிற்கும ரனைக்கண்டு வாளால் வெட்ட
அடியெடுத்துத் துடுக்காய்ச் செகையிற் கீழே
அவன்விழுந்தே யுயிரிழந்து போனா னப்பால்
படிமிதுயி ரிறந்தமிலேச் சன்ச ரீரம்
பாவைச்சமை யாற்கீழே யிடப்ப துகம்
வடிவேல னைக்கண்டு நமன்க ரித்து
வணங்குக்கொண் டார்கள்போது மிருந்த தன்றே. (1)

அமனுடனே தூதர்மிலேச் சனைப்பா சங்கொண்
டுருகுவந்து கட்டவரும் போது செந்தூர்க்
குமரனடி பணிகணங்க ளோடி வந்து
குகனருள்பெற் றிருக்குமித் தமனைப் பாவம்
சுமக்குமீன் கள்தொட வேகூடா தென்று
சொல்லியே தடுத்துவிட்டா ருடனெல்லோரும்
நமனையு மிடஞ்சொல்வோ மென்று சென்று
நடந்தகா ரியங்களெல்லா நவின்றா ரய்யா. (2)

சொன்னதைக் கேட் டியமன்வந் தானந்த நேரம்
சுகரூப மாயிருந்த குகனைக் கண்டு
முன்னின்று தெரிசித்தான் முகத்தைப் பார்த்து
முருகனென்முன் வந்தென்ன காரிய மென்றான்
முன்னவன்கேட் கையியம னிதோகீழ் வீழ்ந்த
முழுப்பாத கனைக்கொண்டு வரவே சொல்லி
என்னிடத்தில் நின்றதூ தரைவிடுத்தேன்
இறைவாவுன் கணங்கள்வந்து தடுத்து மீறி (3)

இந்தமிலேச் சனையுமது பாதஞ்சேர்த்த
தென்னகா ரணமென்றே யிரந்து கேட்க

முந்தனைட்ப் படிசெப்பா விகளா றுறு
நூன்மறையோர் தொழுந்மை முகம்பார்த் திந்தச்
சிந்துப்ரம் வந்திருக்கும் பேர்கள் பாவம்
தேய்ந்தொழிந்து நம்பக்தி நிழல்சேர் வார்கள்
சிந்தைதனினை திவன்சிந்து புரத்தில் வந்து
சேர்ந்தேனென் றுறுமுகங் களையுங் கண்டான். (4)
நமக்கெதிரே வுயிர்விட்டுக் கிடந்தா னன்றி
நன்மறையோ ருடன்பேச்சும் நின்றுன் பாவம்
சுமக்கும்பா தகனிந்த நன்மை யாலே
தொடர்ந்தபா வங்களையே ஒழித்தன் பாகி
எமக்கடிமை யாய்ப்பாத நிழல் சேர்ந்தான்
இதுசத்தி யமென் சொல்லிப் பின்னும்
உமைக்கிழிமைக் தன்கந்த னருளிச் செய்வான்
உலகிலுயர் சிந்துபுரம் புகழைத் தானே. (5)
சிந்துபுரமென்னுந் திருச் செந்தூர் நல்ல
திரிசுதந் தார்களுட னுமு மென்றும்
புந்தியினின் நினைவாகத் துதிக்கத் தக்கப்
புகழுடைய தலமாகு மென்று சொல்லி
சந்தோஷ முண்டாக அருள்செய் தாரச்
சனபியமன் குமரனடி பணிந்து நல்ல
சிந்தையுடன் விடைபெற்றுத் தானி ருக்கும்
சிறந்தபட் டணம்போனான் செருக்கற் றானே. 6
ஆதலாற் சுகமுனிவர் தெரிய யிந்த
அம்புவியிற் செந்திநகர் முருக வேள்தன்
பாத அருள் மகிமையினு லேசா யுச்சிய
பதவிதருந் தலமென்று சத்திய மாக
வேதநெறிப் படிவியாச முனிவ ரன்று
விபரமுட னேசொல்லி யருளிச் செய்தார்
காதலாய்ச் சுகமுனிவர் மகிழ்ந்து கேட்டுக்
கந்தனடி பணிந்துநல்ல கதிபெற் றாரே. 7

இயமனுக்கு சிந்துபுரவைபவமுரைத்த
அத்தியாய முற்றிற்று.

உ

சிவமயம்.

## சந்தான விரதத்தின் பயனைச் சொல்லுகிறது.

சிவன்செயலால் காசிபன்பத் தினியாள் கர்ப்பிற்
பிறந்தவன்தான் அதிதிபிள்ளை வாஞ்சை யாலே
தவஞ்சேரு காசதனை யடைந்து பின்னை
தருவதா கியவிரத மருள வேண்டுமெ
பவனடியை மறவாத பெரியோ யென்று
பணிந்துபிரார்த் தித்தாள்நா ரதருங் கேட்டு
சிவகுருவை வேலனுக்குப் பிரிய மான
செயல்சந்தா னம்விரதஞ் செப்பு கின்றார். 1

பாக்கியமே தருங்கார்த்தி கைமா தத்தில்
பௌரணிமையி லன்பாய்ச்செந் தூரின் கண்ணுண்
டாக்கியதோர் கந்தபுட் கரணி யுமற
றங்குள்ள தீர்த்தமெல்லா மாடிப் பாவம்
நீக்கியகு மாரனைக்கும் பிட்டெ ழுந்து
நினைந்துமாப் பாட்டிற்போய் மௌன மாக
வாக்கியத்தின் படிவடக்கு முகமாய்க் கந்தன்
மலரடிக ளெதிர்நோக்கி யிருந்து நன்றாய். 2

வலக்கைபெரு விரலால்தன் னெதிர்மேல் பக்கம்
மகிழ்ந்துசக் கரவடிவ முன்கீழ் பக்கம்
அலக்காய்முத் தலைச்சூல் வடிவ முதல்
லிருஞற இவ் விரண்டுக்கு நடுவே கந்தன்
வலக்கைஇருக் கும்வேலா யுதமும் பார்த்து
வாய்பேசா மற்றரையி லெழுதி யன்பு
பெலக்கவே பூசித்து நமஸ்க ரித்து
பெரியவன்கோ யிலைநோக்கி எழுந்து நின்று. 3

பெரியகரு ணைகள்முழுதை யுஞ்செய் யுஞ்சுப்
பிரமணியா வென்றுண்மை யோடு மூன்று
தரங்கண்டத் திலிருந்தெவ் வளவு வோசை
தடையின்றி எழும்மா அவ் வளவு வோசை

குருவருளாற் பெறச்சொல்லிப் பின்னற் சூரன்
பெருங்கிளையை யடைந்திட் டிருக்கு மல்ல
அருட்கடலி லெழுந்தமிழ் மௌன மாக
ஆறுமுக னிருக்குஞ்சந் நிதிமுன் வந்து. 4

திருச்செந்தூர்த் தலப்புரா ணத்தில் வேதன்
செப்பியதின் படிவிரத மிருந்த பேர்கள்
கருத்தின்படி யவரவர்கள் பலன்கள் பெற்றுக்
அவனியில் வாழ்ந்திருப்பா ருண்மை யென்று
உருத்தோடு கௌதம முனிவர் சொல்ல
உணர்ந்துசந் தானவிர தத்தைக் கேட்டுச்
சருக்காம லுடனேகா சிப முனிவர்
தன்மனைவி அதிதிமனங் களிக்கொண் டாளே. 5

அதிதிமகிழ்ந் திவ்விரத மிருந்துகந்தன்
அருளாலிந் திரனையுபேந் திரனைப் பெற்று
கதிபெருகி இன்றுவரைச் சோர்வு நீங்கிக்
கன்றுமிர்த்தே இருக்கின்ற காத லாலே
விதிபாலிவ் விரதத்தைத் தனிவாய்ச் செய்தோர்
வேலவனுக் கடிமையாய் அவன்சீர் பாத
நீதியான மோக்ஷஇன் பத்தைப் பெற்று
நெடுநாளும் வாழ்வார்க ளுறுதி தாமே. 6

சம்பூரணம்.

---

1-வது புஸ்தகத்தில் 53-ம் பாட்டு பிழை திருத்தப்பட்டது.

சேவித்தா ரன்பரெல்லாருந் தீபவி கற்பூரத்தில்
ஆவலாயுன்னைக்கண்டு அன்புடன் செந்தில் வந்து
காணிக்கை அதிகஞ்செய்து வைத்து கும்பிட்டே னப்பா
பாவியென் வினைகமர்த்தன் பதத்தன்பு தந்தாட் கொண்டே

2-வது புஸ்தகத்தில் தோத்திரத்தில் 19-ம் பாட்டு பெருந்தனில்லை.

கருணைபுரி தெய்வபாண்டா வில்வுலகும் பொன்னுலகுங்
கவலைபோமே
திருமுருகா உன்னைமறந்துக் கொண்டுவெழுக் காடுமோ
சித்தம்வைத்தே

இருமூன்று வாயாலே சொல்லேழை யெனப்பாரா
திருந்தாற்கந்த
னருளிதுவோ வென்றுலகம் பழியாதோ குறையிலையோ
அருமைவாழ்வே.
சிவாவென்றுஞ் சரவணப வாவென்று மொருதாஞ்
செப்பினோர்கள் கருத்து
சித்தித்தபடி முடித் திருநெறியை யென்றே மறை
தெரியும்படிக்கருளுதே
தவநெறியினின்றுசிவ சரவணபவா குகா
சங்கராவென் றனுதினந்
தனியிருக் துச்சிக் குமேழை யெனைதவித்
தருளா திருப்பையோ சொல்
புவனத்திலேர்துமுக மாயா துமுக மூவிப்
பெருந் தகாரைக் கொன்று பின்
பொன்னகர்தெய் வானையைக் கன்னிவள்ளியை மணம்
புரிந்து செந்தூரில் வந்து
எவருந்துதி செய்திட நீலமயில் மேலேறி
யேகமா யிருந்தாக செய்
யிறைவனே வினையெலாந் தீர்த்தருள்செய் முருகனே
யேழைகட் கருளீசனே. (1)
சரவணப வாவென்று ஒருதரஞ் சொல்வோர்க்கு
சாயுச்சிய பதவி யீயுஞ்
சண்முக மென்றுனை சாஸ்திரஞ் சொல்வதன்
தன்மையை யுணர்ந்து குகனே
இரவுபகல் கொஞ்சமு மென்றனும் நெஞ்சமு
மிடைவிடா துனைநினைந்து
எப்பொழுதுஞ் சரவணப வாவென்று சொல்லுதே
இரங்கா திருப்பையோ சொல்
பாவைரு மூலனிற் சென்றின்மா தர்மேனி
பாதவேற் கைப்பிடித்துப்
பகைகொண்ட சூரரைக்கொன்று விண்ணுலகெலாம்
பழயபடி குடிகளேற்றி

திருவளர்தெய் வானையை வள்ளியைச் சேர்ந்தயர்ந்
தெவ்வுலகையுங் காக்கு நற்
செல்வனே வினையெலாந் தீர்த்தருள்செய் முருகனே
சித்திப்போத் தருளீசனே. (2)

சேவித்த வேளையில் நீமுத்தி தருவனே
செயலென்று அருமறை யெலாஞ்
செப்புமொழி பொய்க்குமோ வென்னமுவு நான் பிறப்போ
தேசத்திலடிமை செய்த
பாவத்திறள்வந்து பொங்காக்கி விட்டதோ
பன்னிருகை வேல் குமாரா வுன்
பார்வைக்கு எதிர்நிற்குமோ வென்று வினையெழும்
பகருவாய் வாய்திறந்து
ஆவது மழிவது நின்செய லில்லையோ
அயன்கை யெழுத் தறுதியோ
அனைத்தெல்லா ஆயுதமில்லையோ நின்திரு
வருளுக்கு வலுவில்லையோ
தேவர்க்குந் தேவனே குருமுனிக் கருளிய
தேசிகா செந்தில் வாழுஞ்
செல்வனே வினையெலாந் தீர்த்தருள்செய் முருகனே
சித்திப்போர்க் கருளீசனே. (3)

மன்னர்கள் பயமுஞ் சின்ன மனிதர்கள் பயமுந்தீர
வென்னமாய்த் தவசெய்வே னிறைவனே கந்தநாதா
உன்னடிக் கன்பருக்கு உபதேசஞ் செய்தென்னுளைய
கன்னலின் ரசம்போலெத்தன் கருத்திலி லருள்பெய்வாயே. (4)

பெய்தருட் கண்ணாற் பார்த்தென் பிழையெல்லாம் பொறுத்தசட
சொய்தடி யேனுன் செய்த கொடுவினை யெல்லாம்போகச் [கொண்டு
செய்தகல்லியர்க்கும் வேணி சிவனுக்கு முபதேசித்த
மெய்தவப்பொருளே செந்தூர் வேலனே ரக்ஷிப்பாயே. (5)

பொச்சமில் லன்பர் போற்றும் பூரணி புனிதயான் பரிவா
எச்சம பங்களுக்கு மிறைவனே நிறைந்த சோதி
அச்சமும்பய முந்தீர அருட்கண்ணாற் பார்த்திரங்கி
இச்சமயத்தில் வந்தென் னிருவினை தீர்த்தாள்வாயே. (6)

வாயதுந் தளர்விலாத மனமும்பத்தியும் பொருந்தி
தாயகா நமசிவாயா சரவண பவனென்று
நேயமாய்த் துதிகள்செய்து நின்திரு மலர்த்தாள்காண
நீயருள் புரிசெந்தூர்வாள் நேசனே தேவர்கோவே. (7)

கோவென்றுங் குமாரவென்றுங் குகாவென்று நினைத்தெல்லாக்
தாவென்று முலகமெல்லாஞ் சந்ததம்போற்று முன்மேல்ப்
பாவென்னுந் தமிழின்மாலை பாடிஉன் னடியில் வீழ்ந்தாலப்
போவென்று தள்ளுவாயோ புகழ்செந்தூ ருறைவேலோனே. (8)

வேலனே பசிமிகுந்த வேதைபா லழுதுநின்ற
பாலனே சாப்பிடென்று பாலளித்தவள் தன்மைந்தா
சீலனே மயில்மேல்வந்துன் தெரிசனந் தருவாய் நல்ல
கோலனே வானோர்தங்கள் கொடுவினை களைந்தமன்னே. (9)

போனநாள் போனதின்னம் புதியநாளும் போகாமல்
ஞானமோ டுயர்ந்தகல்வி நலமெலாந் தந்தென்றனுக
கானமர் தினைப்புனத்துக் கன்னியை மணந்தவேலா
வானவர்க் கருளுஞ்சீலா வந்தெனை யாட்கொள்வாயே. (10)

கொள்ளுவா யடிமையென்னைக் கொஞ்சமு மஞ்சலென்றே
விள்ளுவாய் கருணைகூர்ந்து வேலுடன் வினைகளெல்லாக்
கிள்ளுவாய் பிறவிநோயைத் தேடிசெய் நமனைத்தூரத்
தள்ளுவாய் உய்ந்தேனையா சண்முகானந்த வாழ்வே. (11)

கட்டளைக் கலித்துறை.

செய்வான் தவமேற்றிருப்பி லென்னைவைத் தருள் செந்தனபருக்
கொய்வான் வினைகளை வேறநல்ல குமரனவன்
தெய்வானைவள்ளிமகிழ அருள்மொழி செ[illegible]
பெய்வானலஞான அருளியவன்கழல் பேணுவனே.

சம்பூர்ணம்.